முதலாளித்துவ உலகில் தனக்குள்ள ஏகபோக அந்தஸ்தை உபயோகப்படுத்தி தங்குதடை
யற்ற விதத்தில் பிற தேசங்களைக் கொள்ளையடித்து வருகிறது. தங்கள் நாட்டிலுள்ள சாமான்
கள் விற்கும் விலையைவிடக் குறைந்த விலையில் பிற முதலாளித்துவ தேசங்களில்
விற்று (Dumping) பிரிட்டன், பிரான்ஸ், போன்ற தேசங்களின் போட்டியை அமெரிக்க ஏக
போக முதலாளிகள் முறியடித்து வருகின்றனர். உதாரணமாக அமெரிக்க சர்க்கார் விவசாய
விலைக்காவே 25லிருந்து 30சதம் வரை குறைவான விலையில் 1951லும், 1952லும், ஒரு சில
மாதங்களில் 4கோடி 70லட்சம் டாலர் பெறுமானமுள்ள சாமான்களை வெளிதேசங்களுக்கு
ஏற்றுமதி செய்திருக்கிறது. இதே போன்று தனிப்பட்ட ஏகபோக அமெரிக்க முதலாளிகளும்
ஏற்றுமதி செய்து மற்ற முதலாளித்துவ தேசங்களின் மார்க்கெட்டுகளை கைப்பற்றியுள்ளனர். இவ்
விதம் அமெரிக்க தேசம் மட்டும் மற்ற முதலாளித்துவ நாடுகளுக்கு ஏற்றுமதி செய்கிற
சாமான்களின் இன்றைய மொத்த மதிப்பு 1250 கோடி டாலர். இது 1937ல் இருந்ததைப்
போல் நான்கு மடங்கு அதிகம். அதே சமயத்தில் அமெரிக்காவுடன் வியாபாரத் தொடர்பு
கொண்டுள்ளதால் மேற்கு ஐரோப்பிய நாடுகளின் அன்னிய வியாபாரத்தில் 1800 கோடி டாலர்
வரை துண்டுவிழும் நிலைமை ஏற்பட்டுள்ளது. இந்த அளவு பிரிட்டன் உள்ளிட்ட மேற்கு ஐரோப்
பிய நாடுகள் அமெரிக்க ஏகாதிபத்தியத்திற்குக் கடன்பட்டு தவிக்கும் நிலை ஏற்பட்டுள்ளது *
அமெரிக்க ஏற்றுமதிப் பொருள்கள் பிற நாடுகளின் தொழில் வளர்ச்சிக்கும் உதவும்
சாமான்கள் அல்ல. மக்களின் அன்றாடத் தேவைக்குதவக் கூடிய சாமான்கள்கூட அதிக
மில்லை. மாறாக, யுத்த தளவாடங்களும், அமெரிக்க ஆயுதங்களும்தான் பெரும்
பகுதி. * அதே சமயத்தில் பிற தேசங்கள் அமெரிக்காவிற்கு சாமான்களை ஏற்றுமதி செய்து
விற்க முடியாத விதத்தில் அன்னியப் பொருள்களின் மேல் அதிக சுங்க வரியைச் சுமத்
தியுள்ளது. 40லிருந்து 70சதவிகிதம் வரைக்கும் பிற நாட்டுப் பொருள்களுக்கு அமெரிக்கா
சுங்கவரி விதித்துள்ளது. இதனால் பிற முதலாளித்துவ நாடுகள் அமெரிக்காவிற்கு ஏற்றுமதி
செய்த சாமான்களின் மதிப்பு சுமார் ஒன்னரை மடங்கு குறைந்து விட்டது. அதே சமயத்தில்
அமெரிக்கா பிற முதலாளித்துவ நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யும் பொருள்களின் மதிப்போ
நான்கு மடங்காக அதிகரித்துள்ளது என்பதை பார்த்தோம். முதலாளித்துவ நாடுகள் இன்று
அமெரிக்காவிற்குக் கடன்பட்டு அடிபணிந்து கிடக்கும் நிலைமை இது! அமெரிக்காவின் மார்ஷல்
உதவி பெற்ற தேசங்களுக்கு நேர்ந்துள்ள கதி இதுதான். சோ.யூ., சீனா, போன்ற ஜனநாயக
நாடுகளுடன் வியாபாரம் செய்யக்கூடாதென்ற அமெரிக்காவின் கட்டளைக்குட்பட்ட தேசங்
களுக்கு நேர்ந்துள்ள கதி இது. * இதனால் மேற்கு ஐரோப்பிய நாடுகளின் மக்களின் அன்
றாட தேவைக்கான சாமான்கள் இறக்குமதியும் குறைந்துவிட்டது. மாமிசம் 35சதம், தான்
யம் 33சதம் வெண்ணெய் 31சதம், 1938ல் இறக்குமதியானதைவிட 1951ல் குறைந்து
விட்டது. இது நேரடியாக மக்களின் வாழ்க்கைத் தரத்தைப் பாதித்துள்ளது. ** பிரிட்டனுக்கு
எதிராக ஜப்பானைத் தூண்டுகிறது:- அமெரிக்காவின் போட்டியைத்தவிர. யுத்தத்தில் தோற்ற
முதலாளித்துவ தேசங்களான மேற்கு ஜெர்மனியையும், ஜப்பானையும் இன்று அமெரிக்கா,
பிரிட்டன், பிரான்ஸ் போன்ற தேசங்களுக்கு எதிராக வளர்த்து வருகிறது. அதிகார பூர்வ
மான கணக்கின்படியே 1951ல் மேற்கு ஜெர்மனி 209 சதவிகிதமும், ஜப்பான் 166 சதவிகிதமும்
1949யைவிட அதிகமான பொருள்களை ஏற்றுமதி செய்துள்ளது. இப்பொருள்கள் பெரும்பாலும்
ம.கி. தேசங்களுக்கும், பிரிட்டிஷ் சாம்ராஜ்ய நாடுகளுக்குமே அனுப்பப்பட்டுள்ளது. இவ்வ
ருடத்தின் ஆரம்பக்காலத்தில் பி. சாம்ராஜ்ய நாடுகளுக்கு பிரிட்டன் ஏற்றுமதி செய்த
துணிமணிகளைவிட அமெரிக்க ஆதரவு பெற்று மீண்டும் வளர்ந்து வரும் ஜப்பானிய
முதலாளிகள் ஏற்றுமதி செய்துள்ளனர். *. இவ்விதம் ஒருபுறம் அமெரிக்காவிற்கும் மற்
றொருபுறம் பிரி, பிரான்ஸ் போன்ற முதலாளித்துவ நாடுகளுக்கும் முரண்பாடும்- போட்டியும்
வளர்ந்து வருகின்றன. இவ்விதம் அமெரிக்கப் போட்டியிலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்
ளவே பிரி, காமன் வெல்த் நாடுகளின் மகாநாடும் கூடியது. * பிரிட்டனை போலவே மற்ற
முதலாளித்துவ தேசங்களான, பிரான்ஸ், ஹாலந்து, டென்மார்க், நார்வே, ஆகிய தேசங்க
ளும் அமெரிக்க பிரிட்டன், போட்டியால் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளதால் தங்களை இப்போட்டியிலி
ருந்து பாதுகாத்துக் கொள்ளவும் தங்கள் நாட்டிலிருந்து ஏற்றுமதியை அதிகரிக்கவும் நட
வடிக்கைகள் எடுக்க ஆரம்பித்துள்ளன *